18th September 1958]

SRI A. VEDARATHNAM : இந்த மண்பாண்ட தொழிற்சாலை நடத்துகின்ற இடங்களில் கலை சம்பந்தமான வேலைகளையும் போதிப்பதற்கு வேண்டிய நடவடிக்கை எடுக்க அரசாங்கம் முன் வருமா ? நவராத்திரி சமீபத்தில் வரப்போவதால் இந்த தொழிலுக்கு அதிகமாக கிராக்கி இருக்கின்ற காரணத்தால் இந்த இடத்தில் கலை சம்பந்தப்பட்ட வேலைகளை போதிப்பதற்கு அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்த இடத்தில் சேர்ப்பதற்கு முடியாது. வேறு சில இடங்களில் இந்த வேலைகளும் சேர்க்கப்பட்டிருக்கிறது.

*Lorry accidents.*

* 307 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Electricity be pleased to state—

(*a*) (i) the number of persons who died, and (ii) the number of persons who were disabled due to accidents in which lorries were involved during 1958 (up to the end of April 1958) districtwar; and

(*b*) the estimated value of the properties damaged?

THE HON. SRI V. RAMAIAH : A statement [a] furnishing the particulars is laid on the table of the House.

SRI P. G. MANICKAM : இந்த குறுகிய காலத்திற்குள் 576 விபத்துக்கள் ஏற்பட்டிருக்கின்றன, 53 பேர்கள் இறந்திருக்கிறார்கள், 30 பேர்கள் அங்கஹீனம் அடைந்திருக்கிறார்கள், 10,000 மேற்பட்ட ரூபாய்கள் நஷ்டம் ஏற்பட்டிருக்கின்றன. ஆகவே குறிப்பிட்ட காலத்திற்குள் அதாவது இரவு நேரத்தில் லாரிகளை ஓட்டிச் செல்வதற்கு ஒரு வரம்பை ஏற்படுத்தி சர்க்கார் உத்தரவு போடுவதற்கு சர்க்கார் ஆலோசிக்குமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI V. RAMAIAH : இதற்கு தனிக் கேள்வி வேண்டும்.

*Handloom weavers societies.*

* 307-A *Q.*—SRI N. K. PALANISAMI (on behalf of Sri V. K. Kothandaraman) : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) எத்தனை கைத்தறி நெசவுத் தொழிலாளர் சங்கங்களுக்கு ஸ்பெஷல் ஆபீஸர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர் (ஜில்லா வாரியாக) ?

(ஆ) எவ்வளவு காலமாக ?

(இ) அவர்களின் மாதச் சம்பளம் என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*), (*b*) & (*c*) A statement [b] is placed on the table of the House.

*Saw mill at Erode.*

* 307-B *Q.*—SRI N. K. PALANISAMI (on behalf of Sri V. K. Konthandaraman) : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there is any proposal to issue a licence to open a saw mill in Erode, Coimbatore district;

---

[a] Printed as Appendix V on page 227 infra.

[b] Printed as Appendix VI on page 228 infra.